# துயரம்

### திரு. ப.ச. நடேச பிள்ளை அவர்கள்

திருவள்ளுவர் ஆண்டு 1983, ஆனி, 28ஆம் நாள் (11-7-52) வெள்ளிக் கிழமை இரவு செந்தமிழ்ச்செல்வரும், நம் சங்கத் தொண்டரும் ஆகிய வித்துவான் திருவாளர். ப. ச. நடேச பிள்ளை அவர்கள் மறைந்த கொடுஞ் செய்தி கேட்டு அளவிலாத் துயர் அடைகிறோம்.

திரு. பிள்ளையவர்கள் தண்டமிழ்த் தாயிடத்துத் தனி யன்பு பூண்டு பணியாற்றும் உண்மைக் கருத்துடன் சென்ற பல ஆண்டுகளாக நம் சங்க உறுப்பினரா யிருந்து தமிழர் கட்கும். சிறப்பாக இளைஞர்கட்கும், செந்தமிழ்த் தாய்க் கும் தொண்டாற்றி வந்திருக்கிறார்கள். நம் சங்கமானது ஒருகால் பொருள் முட்டுப்பாடுற்று மயங்கிய காலத்துத் திரு. பிள்ளை யவர்கள் திருத்துறைப்பூண்டி வட்டத்தில் உள்ள பல செல்வர்களையும் அணுகிப் பொருளுதவியும், திக்கற்ற மாணவர்கட்கு வேண்டிய ஏராளமான நெல் லுதவியும் பெற்றுச் சங்கக் கவலையில் பெரும் பகுதியை நீக்கினார்கள். தமிழப் பிள்ளைகள் கல்வி யறிவு பெற்று சிறந்து விளங்க வேண்டு மென்ற பெருநோக்குடன் பல வகைகளிலும் ஊக்கத்துடன் பாடுபட்டார்கள். இடைநிலை யாசிரியப் பயிற்சி பெற்று மாவட்ட உயர்நிலைப்பள்ளியில் பணியாற்றி வந்த இவர், நம் செந்தமிழ் மொழியிடத்து வைத்துள்ள பேரன்பின் விளைவாக சென்னைப் பல்கலைக் கழக வித்துவான் பட்டமும் பெற்று விளங்கினார்கள். நண்பர்களிடத்து உள்ளன்பு பூண்டு அவர்கட்குக் குறை நேர்ந்துழி மனம் பொறுது உடுக்கை யிழந்தவன் கை போலத் தம் ஆற்றலுக்கு மேலும் கூட ஆதாரங் காட்டி வந்தார்கள்.

இத்தகைய பெருங்குணம் படைத்த பேரன்பர் திரு. நடேச பிள்ளை யவர்கள் தம் உடனுைத்த அன்பர்களை விட்டுப் பிரிந்தது தமிழர்கட்கும், அன்பர்கட்கும், சங்கத்திற்கும் ஈடுசெய்ய ஒண்ணாத பேரிழப்பாகும். அவர்களது குடும்பத் தார்க்கு எம் ஆறுதலுரை தெரிவித்துக் கொள்கின்றோம்.

உ

# தமிழ்ப் பொழில்

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத் திங்கள் வெளியீடு

துணர் ௨௮ | திருவள்ளுவர் யாண்டு ௧௯௮௩ நந்தன—ஆவணி 1952—ஆகஸ்டு | ம ௫

## துயரம்.

### திரு. குழந்தையம்மையார் எனும் சவரியம்மையார் அவர்கள் மறைவு.

நிகழும் திருவள்ளுவராண்டு 1983, நந்தன, ஆடி, 26 ஆம் நாள் (10—8—1952) ஞாயிற்றுக்கிழமை இரவு 9-30 மணியளவில் நம் சங்கத் தலைவர் இராவுபகதூர் திருவாளர் ஆ. யா. அருளானந்தசாமி நாடார் அவர்கள் வாழ்க்கைத் துணைவியார் திருமிகு. குழந்தையம்மையார் எனும் சவரியம்மையார் அவர்கள் தம் ஐம்பத்து மூன்றாவது வயதில் இவ்வுலக வாழ்வு நீத்த செய்தி திரு. நாடார் அவர்கள் உற்றார், உறவினர், நண்பர்கள் யாவருக்கும் பெருந்துயர் விளைவிப்பதாயிற்று. பொது நலத் தொண்டிலேயே தம் கவனமெல்லாம் செலுத்திவரும் திரு. நாடார் அவர்கட்கு தம் இல்வாழ்க்கைத் துணைவியார் தம் இல்லப்பணி நீத்து பிரிந்தது உண்மையாகவே ஒரு பேரிழப்பாகும். பொது நலத் தொண்டில் செலுத்திவந்த கவனத்தில் ஒரு பகுதியாவது இனி திரு. நாடார் அவர்கள் தம் இல்லப் பணியிலும் செலுத்த வேண்டிய இன்றியமையாமை நேர்ந்துளது. திரு. அம்மையார் அவர்கள் திரு. நாடார் அவர்கட்கு உறு துணையாயிருந்து இல்லக் கவலை அவர்கட்கு ஒரு சிறிதுமின்றி முழுப் பொறுப்பையும் தாமே ஏற்றுத் திறம்படக் குடித்தனம் நடத்தி வந்தவர்கள். அம்மையார் அவர்கள் அன்னை தயையும், அடியாள் பணியும், அமைச்சர் உதவியும் முதலிய பண்புகளில் சிறந்து விளங்கியவர்கள். திரு. நாடார் அவர்களைப்போலவே திரு. அம்மையார் அவர்களும் விரிந்த மனம் உடையவர்களாய் ஈகை இரக்கம் கொண்டவர்களாய் அண்டினவர்களை ஆதரிப்பவர்களாய், கடவுட்பற்றில் சிறந்தவர்களாய் விளங்கினார்கள். இத்தகைய நற்பண்புகள் நிறைந்த திரு. அம்மையாரவர்கள் பிரிவு அவர் தம் கணவர்க்கும் மக்களுக்கும், உறவினர்க்கும் ஆற்றொணாப் பெருந்துயர் விளைக்காமலிருக்க முடியாது. என்றாலும் திருவுளச் செயல் என்றே நாம் கருதி ஆற்றியிருப்போமாக. நம் தலைவர் அவர்கட்கும், அவர் தம் மக்களுக்கும் நம்மாலியன்ற வரை ஆறுதல கூறி இக் கடுந்துயரை ஆற்றியிருக்கும் மனவலிமையை அவர்கட்கு அருளுமாறு திருவருளை வழுத்துகின்றோம்.

# பொருந்துமா? (௫௫)

லாசிரியர் புலவர்மணி M. குஞ்சிதபாததேசிகர், நன்னிலம்

ாழ்த்து, (1) கடவுள் வாழ்த்து, (2) அறுமுறை வாழ்த்து, க்கள் வாழ்த்து என மூவகைப்படும். இவ் வாழ்த்து புறப் நுண் பாமாண் டிணையைச் சார்ந்த ஒரு துறையாகும். ற்றுள், கடவுள் வாழ்த்தும், அறுமுறை வாழ்த்தும் தேவர் கையையும், மற்றது மக்கட் பிரிவையும் சேர்ந்தன. இதனைத் தால்காப்பியர்,

"அமரர்கண் முடியும் அறுவகை யானும்
புரைதீர் காமம் புல்லிய வகையினும்
ஒன்றன் பகுதி யொன்று மென்ப" (தொள்–பொருள்)

அமரர் கண்ணே வந்து முடியு மெனவே, அமரர் வேறென்ப தூஉம் அவர் கண்ணே வந்து முடிவன வேறென்பதூஉம் பெற்றாம். அவை (1) முனிவரும், (2) பார்ப்பாரும், (3) ஆனிரையும், (4) மழையும், (5) முடியுடை வேந்தரும், (6) உலகுமாம். இவை தத்தஞ் சிறப்பு வகையான் அமரர் சாதிப் பால என்றல் வேத முடிபு. இதனானே பிறப்பு முறையாற் சிறந்த அமரரை வாழ்த்தலும் சொல்லாமையே முடிந்தது தந்திர வுத்தி வகையான் என்றார். ஆகவே, வாழ்த்து,

1. கடவுள் வாழ்த்து 2. அறுமுறை வாழ்த்து 3. மக்கள் வாழ்த்து என மூன்று வகைப்படும் என்பதும், இம் மூன்றனுள் அறுமுறை வாழ்த்து இரண்டு வகைப்படும் என்பதும் பெற்றாம்.

| | 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
|---|---|---|---|---|---|---|
| I. | அந்தணர் | வானவர் | ஆனினம் | மழை | வேந்தன் | உலகம். |
| | 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
| II. | அந்தணர் | முனிவர் | ஆனினம் | மழை | வேந்தன் | உலகம். |

I. உதாரணம். "வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீய தெல்லாம் அரனாமமே
சூழ்க வையகமுந் துயர் தீர்கவே"

II. உதாரணம் "வாழி மறையோர் மழைவாழி யான்வாழி
வாழி வழுதி வளநாடு—வாழி
புவிப்பா வலர்புகழ்பூ தூர்முனிவன் வாழி
கவிப்பா வலர்க்கரசென் கண்" என வரும்.

இதுகாறுங் கூறியவாற்றால் வாழ்த்து பாடாண் டிணையைச் சார்ந்தது என்பதும், கடவுள் வாழ்த்தும் அறுமுறை வாழ்த்தும் அமரர் சாதியைச் சார்ந்தன என்பதும், மக்களை வாழ்த்தல் மக்கள் சாதி என்பதும், அறுமுறை வாழ்த்து இரண்டு வகைப்படும் என்பதும் திருஞானசம்பந்தர் பாடி யருளிய வாழ்க அந்தணர் என்று தொடங்கும் பாடல் அறுமுறை வாழ்த்தில் பிறப்பு வகையால் தேவர் சாதியைச் சார்ந்த வாழ்த்தாகப் பாடியுள்ளார் என்பதும் உய்த்துணர்ந்து இன்புறுக.

பொருந்துமா? ஆராய்க.

# உமர்காயம் யாத்த (ரூபாயத்.)

(மெய்கண்டான்)

(முற்றொடர்ச்சி: துணர் உஅ, மலர் ச, பக்கம் 127)

45

ஓய்வெடுக்கும் கூடாரம் போன்ற திவ்வுடல்; மரண ஆட்சியால் ஒரு சுல்தான் சென்ற பின்னர், இருள் தேவன் மற்றொரு சுல்தான் வருகைக் காவன செய்கிறான்.

46

உமது–எமது கணக்குகள் முடிவுறுவதால் வாழ்க்கை ஒழியுமென்று பயப்பட வேண்டாம்—ஒழிவது மில்லை. நிலைத்து நிலவும் சகி அக்கோப்பையிலிருந்து நம்மைப் போன்ற பல்லாயிர குமிழிகளைச் சொரிந்தார்; என்றும் சொரிவர்.

47

நீரும்—நானும் திரைக்குப் பின் சென்ற பின்னர் இவ் வுலகம் ஊழி ஊழி கால மிலங்கும். கடலிலெறியப்பட்ட கூழாங்கல்லைப் பற்றிக் கடல் கவலைக்கொள்வதைப் போன்று நாம் வந்து சென்றதைப்பற்றி எது கவலை கொள்ளும்?

48

புழுதி யிடையேயுள்ள கிணற்றில் சிறிது தண்ணீர் பருக சிறிது நேரம் தங்குகிறோம் கேள்! மருட்சியாம் யாத்திரை தொடங்கிய இடத்திலிருந்து சேரவில்லை ஓரிடத்தையும். ஆதலால் விரைவுடன் சேல்க.

49

நண்பனே! மின்னொளி போன்ற வாழ்க்கையின் இரகசியத்தை நீ சிந்தித்ததுண்டோ? பொய்மையையும் உண்மையையும் பிரிப்பது மிகச்சிறு நுண்ணிழையே. யான் பிரார்த்திக்கின்றேன். உயிர் எதன் மீது சார்ந் திருக்கிறதென்று?

50

பொய்யையும்—மெய்யையும் பிரிப்பது நுண்ணிழை யன்றோ! களஞ்சிய வீட்டையும், தற்செயலாகத் தலைவனையும் அறிதற்கு ' அலிப் ' என்ற வார்த்தை வழிகாட்டி. என்றாலும் உம்மாலறிய வியலுமா?

51

வையகத்துப் பொருள் யாவற்றினும் அவர் இரகசியமாயிலங்கல்—பிணியினின்று தப்புவிக்கும் மருந்து விரைந்து நரம்பின் வழி பாய்வதை யொக்கும்; அணு முதல் மலையொத்த உருவங்களனைத்திலும் அவருள்ளார்; அவைகள் யாவும் மாறுகின்றன; அழிகின்றன; ஆனால் அவர் அப்படியேயுள்ளார்

52

சின்னேரம் சிந்தித்தேன்—பின்னிருக்கும் பிடிப்பு இருளில் மூழ்கி. அவ்விருளே வளையமாகி அதனிடையேயுள்ள நாடக அரங்கில் அவனே அரும்பி நடிக்கும் யாவும் அவன் கற்பனையினால் காலங் கலழித்ததற்குத் தோற்றுவித்ததே.

53

இன்று பலனின்றி உரமான தரையைக் கீழ் நோக்கியும்—கதவில்லா விண்ணை மேல் நோக்கியும்—உற்றுப் பார்க்கிறீர் உயிருடனிருக்கும்பொழுதே; நீவிர் இல்லாதிருக்கும் பொழுது நாளை எப்படி இருக்கும்? பலனில்லை எனின் என்ன ?

54

இந்த, அந்த முயற்சிபற்றி வீண் பிரயத்தினத்திலும், பிணக்கிலும் காலத்தைச் செலவிடாதே. ஒருவரைப்பற்றியும் கவலையுறாமல் பழுத்த திராட்சைப் பழத்தால் களிபேருவகை எய்துக.

55

நண்பர்களே! எவ்வளவு துணிவுடன் நிரம்ப மது வருந்தி என்னில்லத்திலிரண்டாம் மணம் செய்து கொண்டமை உங்களனைவர்க்கும் தெரியும். என் படுக்கையிலிருந்த மலடான காரணங்களை விலக்கி விட்டேன்; திராட்சைக் கொடியின் மகளை அன்புடன் அணைத்துக் கொண்டேன்.

56

"இருக்கிறது"—"இருக்கிறது—இல்லை" என்பவற்றைச் சட்டப் படியும் நேராகவும் விளக்கினும்; "மேல்-கீழ்," என்பவற்றை அளவை முறையில் யான் விளக்கினும், ஒவ்வொருவரும் ஆராயவேண்டிய பலவற்றிலும் மது தவிர, மற்றைய யாவற்றையும், யான் ஆழ்ந்தாராய்ந்ததில்லை.

57

மக்கள் மொழிகின்றனர், என் ஆராய்ச்சி உண்மையென்று, "நாள் காட்டிப்பட்டியலானது பிறவாத அடுத்த தினத்தையும்—இறந்த நேற்றைய தினத்தையும் விளக்குகிறது."

58

கடைசியில் விருந்து நடைபெற்ற மதுக் கடையின் கதவு வழியே தேவ தூதனைப் போலொருவன் தோளில் பாத்திரம் சுமந்து வந்து என்னைச் சுவைத்துப் பார்க்குமாறு ஆணையிட்டான். "பார்த்தேன்—அந்த மதுவை."

59

திராட்சை இன்றியமையாதது; எழுபத்திரண்டு பிரிவுடைய சாதிகளைச் சாய்த்திடுக; இரசவாதி ஒரு நொடியில் உலக வாழ்க்கையாம் ஈயத்தைத் தங்கமாக்குகிறுன்.

60

என்றுமுள்ள மாண்புடைய மகமதுவின் சுழல் காற்றும் வாளின் முன்னே உயிரைச் சூழ்ந்துள்ள இருளாம் பயம்—துன்பம் யாவும் பறந்தோடுகின்றன.

61

இறைவனால் தோற்றுவிக்கப்பட்ட இத்திராட்சைச் செடியை இகழுபவர் எவர்? அது நமக்கு நன்மை யாத லால் பயனுறுகிறோம்; பயனுறவில்லையா? அது தீங்குடைய தாயின் ஏன் அதைத் தோற்றுவித்தார்.

62

என் வாழ்வு மங்கி வீணுவதால் கட்டாயம் இவ்வினிய வாழ்க்கையை வெறுக்கிறேன்; வருங்காலத்தைப்பற்றிக் கவலையுறுகிறேன்; அல்லது தெய்வீக மதுவிற்காக நம்பி ஏங்கி இருக்கிறேன்; ஆதலால் கிண்ணம் நிரம்ப மது வார்ப்பாயாக.

63

நரகத்தைப்பற்றிய பயங்களும், வீடு பேறு பற்றிய நம்பிக்கைகளும் உண்டு; ஒரே ஒரு உண்மையுண்டு— "இவ் வுயிர் பறந்தோடுகிறது." ஒரே ஒரு உண்மை. மற்றவை யாவும் பொய். மலர்ந்த மலர் மாய்தல் திண்ணம்.

64

இருட் கதவு வழியே நமக்கு முன்னர் ஏகிய எண்ணி லரி லொருவராயினும் வந்து நாம் செல்லுவதற்குரிய பாதை எதுவென வுரைத்திலர். விந்தை யல்லவா?

65

தீர்க்கதரிசிகளைப் போன்று நம் முன் தோன்றிய பக்தர் களும், அறிஞர்களும், அவர்கள் நண்பர்களிடம் கூறிய உண்மைகள் யாவும் கதைகளே. அவைகள் உறக்கத் திலின்று எழுப்புகிறது; மீண்டும் உறக்கத்திற் கழைத் தேகுகிறது.

66

என்னுயிரை அருவத்துடனனுப்பினேன்; மறு வாழ்வுக்குரிய எழுத்துக்களையும் உச்சரிக்க அனுப்பினேன். என்னுயிர் மீண்டும் என்னைத் திரும்பி யடைந்து "நானே தேவ வுலகம்; நானே நரகம்," என்று விடை யளித்தது.

67

நிறை வெய்திய அவாவின் தோற்றமே விண்ணுலகம்; அழல் மீதுள்ள உயிரின் நிழலே நரகம். எறியப் பட்ட இருளிலே மூழ்கிய நெடுங்காலத்திற்குப் பின்னர் அதனின்று நாம் கிளம்புவதால் விரைவிலிறப்போம்.

68

காட்சியாளன் நள்ளிரவில் கதிரவனைப் போன்று வைத்திருக்கும் விளக்கைச் சுற்றி, தந்திரமாகிய நிழல் உருவு வந்து செல்வதைப் போன்றே நாமிருக்கிறோம்.

69

பகலிரவென்னும் சதுரங்கப் பலகையிலே உதவியற்ற விளையாட்டுகளாடுகின்றான்; இங்கு மங்கும் ஓடுகிறான்; ஒருவர்பின் ஒருவராய் பின் புறத்துத் தனிவழியே அழைத்தேகிக் குழியில் தள்ளுகிறான்.

70

பந்துக்குக் கவலை இல்லை எதுபற்றியும்; பந்து இங்கும் அங்கும் ஓடுவது எறிபவனைப் பொறுத்துளது. இந்த நிலத்தில் உன்னை எறிந்த அவனுக்கு அதுபற்றி யாவும் தெரியும்—அவனுக்குத் தெரியும்—அவனுக்குத் தெரியும்.

71

நகரும் விரல் வரைகிறது; வரைந்த பின்னர் நகர்கிறது; தெய்வப் பற்றாலும்—அறிவுடைமையாலும் வரைந்

தலை அரைவரியும் அழிக்க முடியாது. உன் அழுகைக் கண்ணீர் ஓர் எழுத்தையும் கலைக்க முடியாது.

72

கவிழ்க்கப்பட்ட கிண்ணத்தைத் தான் ஆகாயம் என் றழைக்கிறோம்; அதனடியில் நாம் ஊர்ந்து வாழ்ந்து மரண மெய்துகிறோம்; உதவிக்காக அவ்வா காயத்திடை உங்கள் கையை உயர்த்தாதீர்கள்; ஏனெனில் நம்மைப் போன்றே ஆற்றலற்று அது இயங்குகிறது.

73

வையகமுதற் களிமண்ணால் யாவையும் தோற்றுவித் தான்; அங்கே வையக அழிவுக்குரிய வித்தையும் விதைத்து விட்டான்; தரணி தொடங்கிய நாள்முதல், ஒடுங்கும் நாள் வரைக்குரிய திட்டங்கள் யாவும் தீட்டப்பட்டன.

74

நேற்று, இன்றைய மடமைக்குரிய திட்டமிட்டது. நாளைய வெற்றியோ அல்லது கலக்கமோ பெரிதும் மௌன மாயுள்ளது; எப்பொழுது—ஏன் நீ வந்தாய் என்பதை நீ யறிய இல்லை யாதலால்; அருந்து மதுவை? எங்கு—ஏன் போகிறாய் என்பதை யறிய யில்லை யாதலால் அருந்து மதுவை.

75

கூறுகிறேன்: விண்ணிலிருந்து, குருவும் மற்றைய கோள்களும் இறுதியா மிடத்தினின்று அனல் குதிரை மீதமர்ந்து என் விதிப்படி நியமித்த புழுதியாம் உடலிலும் உயிரிலும் பாய்ந்ததன்றி வேறில்லை.

(தொடரும்)

# கீரனெயிற்றியார்.

திரு. K. சோமசுந்தரம் பிள்ளை, B. A., B. L., தஞ்சை.

(முற்றொடர்ச்சி, துணர் ௨௮, மலர் ௪, பக்கம் ௱௰௧)

தங் கணவர் உணர்ந்த நிலையைத் தக்கவாறு எயிற்றியார் மதி நுட்பமுடன் கூறும் திறத்தால், படிப்போர் மனதைக் கவர்ந் தேகும் அவரது புலமை மாண்பு தெருளற் பாலது. இப் பாட்டின் கண் தங் காதலர் தன் பால் உயிராய்க் கருதி யுருகும் அன்பின் பெருக்கைப் பொதிந்து வைத்து, ஆராக் காத லன்பிற்கு அழகு செய்துள்ளார். இதனான் தங் கணவர் பால், தான் நெகிழாத பேரன்புடையராய்த் தனித் திருந்து, தலைச் சிறந்து திகழும் தன் கற் பொழுக்கத்தின் பெருமையினை யும், கலங்கா வுள்ளமொடு தொடர்புறும் தன் னமைதி நிலையினையும் புலப் படுத்தினார். இப் பாட்டின் கண்வினை மேற் செல்லும் தங் கணவர் பால் ஆண்மையினையும் வீரத்தை யும் தழைக்கச் செய்து, தன் பால் காத லன்பும் அமைதியும் படர்வதைத் தெள்ளத் தெளிய வைத்து உணர்த்திய மென்மை இவர் தம் நல் லிசைப் புலமையின் சிறப் பியல்பையும் கவிப் பண்பினையும் எடுத்துக் காட்டா நிற்கும். மற்றும் புலமை சிறக்கும் இப் பாடலில், வேட்டுவனால் பார்வையாகக் காழ் களைந் தருளப் பட்ட, சிறை குவிந்திருந்த வெண் குருகு பனிப் புதலீங் கையின் அழகிய குழை வருட பைதல் வாய் மாறி நிற்கு மென்றது தம்மால் இல்லின் கண் இருக்குமாறு விடப் பட்ட தலைவி வருந்துவா ரென்றும், அதற்கு ஆற்றாது தோழி தேற்றுவா ரென்றும், இவ் வண்ணமே மாரி காலம் கழியா நிற்கும் என்ற விழுமிய உள்ளுறை இருப்பதைப் பொருத்த முறச் சுட்டி அறிய வைத்த பான்மை, இவர் தம் புலமை நுட்பத்தையும் தெளிவையும் திறனையும புலப் படுத்திக் காட்டும். இவ் வாற்றான், கருத லளவையால் உணர்தற் பால வாய எயிற்றியாரது காத லன்பின் உறுதி நிலையும் அமைதியி னாற்றலும் எத்தகைய சீரிய நிலையில் இப் பாடலின் கண் உரு வெடுத்துத் திகழ்கின்ற தென்பதை உய்த்துணர்ந்து தெளிக.

போர், பெரும் போராய் நெடுங் கால மளவும் நீட்டித் தவழி, கிரர், வினை யாண்மையில் மூண்டு எயிற்றியார் குறித்த பருவத்தே வர இயலாமற் போக, பாசறைக் கண் அவர் நீண்டு தங்கி கடும் போரினை நிகழ்த்த வேண்டியதா யிருந்தது. காத லன்பில் குறைவு பாடில்லாத வீரத்தைக் காட்டும் விறலை யுடையாரைப் பிரிந்த கிரரும் வந்து கூட வல்ல கார் காலம் வந்துற்றது. வானத்தில், கரு நிற குளிர் முகில்களால், இரு ளடர்ந்து விட, மழைத் துளிகள் ஞாலத்தில் விழுந்த வண்ணமா யிருந்தன. பல் வகை மலர்கள் குழைந்திட லாயின. அடை மழையால், எள், கொள் முதலிய கூல வகைகள் நன் னிலை கெட்டு சோடைப் பட்டன. குளிரைக் கொண்ட வாடைக் காற்று மக்களது உடலம் நடுக்குற இடை விடாது வீசிக் கொண்டிருந்தது. சில வமயம் விண் அதிர மேகம் இடியோடு கூடி முழங்கும். நெடிய மரக் கிளையில் சிறு மழையோடு சேர்ந்த காற்று மோதுதலான் வண்டுகள் கிளைகளில் அசையா நிற்கும். அவை, விடியலில் பெய்யும் பனியினையுடைய மலர்கள் பால் சென்று ஆங்கு படியாத தாய், சூழ்ந்து சூழ்ந்து பறத்தலைச் செய்தன. குளிர் காற்றால், கிளைத்து விரிந்த கரும்பின் திரண்ட பூக்கள் அசைந்து, மழையால் நனைந்த நாரைப் போன்று, ஈரங் கொண்டு தலை குனிந்த வண்ணமாய் இருந்தன. பசும் புதர்களில் படரும் ஈங்கையி னது தளிர்கள் ஈரத்தால் நெளிந்து வருந்த, முசுண்டையின் பூக்கள் விண் மீனைப் போன்று, அப் புதர்களை அழகுறுத்தின. ஈங்கைப் பைம் புதல் தொறும், வெளிய பூவினையுடைய பகன்றைக் கொடி அணியுறப் படர்ந்தது. வெண் காந்தள், செங் காந்தள், புன்னை, முல்லை, கொன்றை, வேங்கை முதலியன அந்தி நேரத்தில் முதிர் மணங் கமழா நின்றன. பிரிவின் கண் இல்லிருப்பார்க்கு ஏற்ற தல்லாத இத் தகைய பருவத்தில், வெண் மேகம், திசைகளை வெளியாக்கி, வானத்தை தெளி வுடையதாய் வயங்க வைத்தும், பனிப் பருவம், கால வேறு பாட்டான் வந்தணைந்தது. பனித் துளி, பெரு இயக்க மும் பனிப்பும் மிக்க வாடையோடு கூடி, யானை நீரைப் பருகி அயர் வுயிர்த்துத் தூவுதலை யொப்ப, திசை யெங்கும் பொருந்த கடிய சினமுடன் வீசியது. அவரைப் பூக்கள் செறிந்து மலரவும், தோன்றியின் ஒள்ளிய பூக்கள் பிணிப்பு அவிழவும், புகை யன்ன நுண் பனித் திவலையினை நாற் புறமும் பரப்பும பனிப் பருவம் வந்துறுங் காலை, குருகினமும் கொக்கினமும் கல் லென்று ஒலித்து வானத்தே வட்ட மிட லாயின.

இத் தகைய கார்ப் பருவத்தோடு கூடிய பனிப் பருவத்து நிலையினை அறிந் துணர்ந்த எயிற்றியார், கரு விளமும் சடதாளமும், பிரிவுற்று வருந்தும் மகளிரது கண் போல் மலருவதைக் கண்ணுற்ற காலே, அவர் தம் கண்களினின்றும் நீர் வார்ந்தது. மழை யமைந்துற்ற கார் காலத்தில், குளிரின் கடுமைக் காற்றுதும் கள்ளென் யாமத்தும் கண் ணுறக்கங் கொள்ளாதும் எயிற்றியார் மிக நலிந்து வருத்த முற்றார். எனினும் தனது வாழ் நாட் காலம், காரிருளில் கழிய விரும்பாது, தனது உயிரால் காத லன்பின் விளக்கை ஆர்வத்தோடு தாழுற்ற தமிழ்ப் புலமையி னுதவி கொண்டு, தூண்டுவா ராயினர், அது போது கார் மழையில் தன் மனக் கவலை கரைந்தோடுவதாக உணர்ந்தார். உணர்ந்த வழி, எயிற்றியார், கார் காலத்து ஞாலத்தின் இயற்கை யியல்பை. கூடற் றமிழில் கூட்டிய அழகு ஈண்டு ஊன்றி யுணரற் பாற்று,

(க) 'பெய்து புலந் திறந்த பொங்கல் வெண் மழை
எஃகுறு பஞ்சித் துய்ப் பட்டன்ன
துவலை தூவல் கழிய அகல் வயல்
நீடு கழைக் கரும்பின் கணைக்கால் வான்பூக்
கோடைப் பூளையின் வாடையொடு துயல்வரப்
பாசிலைப் பொதுளிய புத லுறும் பகன்றை
நீ லுண் பச்சை நிற மறைத் தடச்சிய
தோ லெறி பாண்டிலின் வாலிய மலரக்
கோழிலை யவரைக் கொழு முகை யவிழ
ஊழுறு தோன்றி யொண் பூத்தளை விடப்
புலந் தொறுங் குருகினம் நரலக் கல்லென்
அகன் றுறை மகளி ரணி துறந்து நடுங்க
அற் சிரம் வந்தன் று.'... ... ... ... (அகம் 217)

(உ) மங்குல் மாமழை விண் ணதிர்பு முழங்கித்
துள்ளுப் பெயல் கழிந்த பின்றைப் புகையுறப்
புள்ளி துன் துவலை பூவகம் நிறையக்
காதலர்ப் பிரிந்த கையறு மகளிர்
நீர் வார் கண்ணிற் கருவிளை மலரத்
துய்த் தலைப் பூவின் புதலிவர் ஈங்கை
நெய்த் தோய்த் தன்ன நீர் நனையந் தளிர்
இருவகிர் ஈருளின் ஈரிய துயல்வர
அவரை பைம் பூப் பயில அகல் வயற்
கதிர் வார் காய் நெல் கட்கினி திறைஞ்சச்
சிதர் சினை தூங்கும் அற்சிரம்... ... ... (அகம் 294)

(ஈ) ... ... ... ... ... ... ... ...
... ... ... ... ... ... ... ...

பயனிலங் குழைய வீசிப் பெயல் முனிந்து
விண்டு முன்னிய கொண்டல் மாமழை
மங்குல் அற்க மொடு பொங்குபு துளிப்ப
வாடையொடு நிவந்த ஆயிதழ்த் தோன்றி
சுடர் கொள கலிற் சுருங்கு பிணி யவிழக்
கரி முகிழ் முசுண்டைப் பொதியவிழ் வான்பூ
விசும் பணி மீனிற் பிசும் புதலணியக்
கன்வன் மண்ணனைச் செறிய அகல் வயற்
கிளைவிரி கரும்பின் கணைக் கால் வான்பூ
மாரியங் குருகின் ஈரிய குரங்க
நனி கடுஞ் சிவப் பொடு தாமந் தோற்றிப்
பனி கடி கொண்ட பண்பில் வாடை. (அகம் 235)

இவ் வகைப் பாக்கள் ஒவ்வொன்றிலும் உறையும் இயற்கைப் புற நலனும் இயல் நலனும் அறி வுலகத்தை மகிழ்விக்கும் மாண்புடையதாய் வயங்கி, இன்ப நலன் பயக்கும் சீர்மை யொடு கற்போருள்ளத்திற் கலந்து அன்னார் தம் நெஞ்சினை யும் அள்ளிக் கொள்ளுகின்றதினுன் இப் பாக்களின் இலக்கியப் பண்பினையும் பெருமையினையும் இருந்தவாறு காணீர்!

கார் காலத்து இயற்கைப் பொருள்களில் ஒன்றித்தோன் றும் உண்மைப் பொருள்களைக் காண்டலான், எயிற்றியாரது மனம் தானே தெளிந்து, அவருக்கு அமைதி பெறும் உர னுடைமையினை அளித்தாலும், பிரி வெனுந் தூய ருருவு கொண்டார், கணந்தொறும் மாறுபடும் உலகியலால் தனது அறிவின் திண்மையில் சிறிது தளர்ச்சியு முற்றூர். கார்ப் பருவம் வந்தும் தனது காதலர் போர்ப் புலத்தைக் கடந்து வராதிருக்கின்றதை வருந்தி எண்ணிய எயிற்றியார் வலை தனைப்பட்ட மயில் போல் தன்னலங் கெட்டு அய லிருந்த தோழியர்க்கு 'எனது நெஞ்சு அஞ்சும் நிலையினை காதலர் அறிந் திருந்தும் இன்னும் வந்திலர். அளி யிலராய் என்னைக் கைவிட் டகன்றூர். என் பால் அன்பிலர் கொல்.! என மன மழிந்து உரைப்பா ராயினர். தனது துன்பத்தி னியல்பை அறிந்தி அழுங்கும் எயிற்றியார் காலத் தியற்கைத் தன்மை யினை யுணரவே, அறிந்ததும் உணர்ந்ததும் கவியாக அவர் பால் மாறியது.

மாசின் மரத்த பலியுண் காக்கை
வளி பொரு நெடுஞ்சினை தளியொடு தூங்கி
வெல் போர்ச் சோழர் கழா அர்க் கொள்ளு
நல் வகை மிகுபலிக் கொடையோடு குக்கு
மடங் காச் சொன் றியம்பல் யாணர்
விடக் குடைப் பெருஞ் சோ றுள்ளுவன விருப்ப
மழை யமைந் துற்ற மாவிரு ணடுநாட்
டா நம் முழைய ராகவு நா நம்
பனிக் கடுமையி னனி பெரி தழுங்கித்
துஞ்சா மாகலு மறிவோ
ரன்பிலர் தோழி நங் காதலோரே. (நற்றிணை 281)

உணர்ச்சி ததும்பும் இப் பாவின் கண், எயிற்றியார் தம் முள்ளத்தின் கண் படிந்த, துன்பத்தின் இயல்பை உலகிய லென உணர்ந்தும், மன வுலகின் கண் உலாவும் நினைவுக் குழு வின் நேர்மையினைக் கண்டு தெளிந்தும், துன்பத்திலும் தூய்மை நலம் தரும் இன்ப அமைதியினைக் காண்கிறார். குளிரான் நடுங்கி நலிந்தாலும் இன்னு மொருகால் தங் காதலர் வந்து கூடுவர் என்ற உள்ளம் உடையராய் எயிற்றியார் இருந்தன ரென்பது இப் பாட்டினது இறைச்சிப் பொருளால் காணக் கிடக்கின்றது. பலியுண் காக்கை, தன் மேல் விழும் மழைத் துளியால் நனைந்து வருந்தியும், விடக் குடைப் பெருஞ் சோற்றுத் திரளை வுண்ணக் கருதி யிருக்குமாறு போல, எயிற்றியார் தங் கணவரது வரவை எதிர் பார்த் திருக்கும் உளப் பாங்கை இப் பாவில் தெளிய வைத்து தன் கலைப் புலமையினையும் புலனுக்கினர். இப் பாவி லுள்ள கருப் பொருளையும் குறிப் பொருளையும் சிறப் புறுத்து முகத்தா னெழுந்த இறைச்சிப் பொருளை உள்ளவாறு உணரும் அறிவு விளக்க முடையார் உள்ளம் சிறைப் படுவ ரெனின், இப் பாட்டின் இலக்கியப் பண்பின் திறம் சால வியக்கற் பாலதாம்.

பனி நாள் வந்து னனி நாளாகிய வாடைக் காலத்தும், காதலர் வாராமையால், பொங்கு துயர் கொண்ட எயிற்றியார், ஒழுகு கண்ணீரால் பார்வை மறைபட்டு, பிரிந்தவரைக் கருதி பெண்மை யியல்பு மிக, மிகக் கலுழ்ந்து நொந்தார். மன வலி யறியாது மிக மயங்கி; தான் இடர்ப் படுவதை உணர்ந்த எயிற்றியார், நிறை நலத்தோடு மன நிலை சிறந்து, 'எனது கண்கள் கா ணுடையன வல்ல' எனத் தோழியர்க்குத் தன்

கலுழ்கை நிற்குங் காலை, வெறுத்துக் கூறுவா ராயினர். நாணத்தை விடுக்காது, அவரது மனம், பிரிவுத் துயரமதால் பரி வடைதலுக்கு ஒரு வகையான ஆறுதலை யளித்தது. இவ்வாறு தேறுத லடைந்த மனம் ஒருமைப்பா டெய்துங் காலை, காத லன்பின் தூய்மை நலம் எயிற்றியார் பால் கிளர்ந் தெழுந்தது. அந் நலத்தில், கவிதை முகிழ்த் தெழ, தனித் தமிழ் சொற்களின் வழி, தம் மனத்தின் இயல்பினை யெல்லாம் நன்கு எடுத்துக் காட்டுவா ராயினர், எயிற்றியார்.

நாணில மன்ற வெங் கண்ணே; நாணேர்பு
சினைப் பசும் பாம்பின் சூன் முதிர்ப் பன்ன
கனைத்த கரும் பின் கூம்பு பொதி யவிழ
நுண் ணுறை யழிதுளி தலைஇய
தண் வரல் வாடையு நம் பிரிந்தி சினோர்க் கழலே.

(குறுந்தொகை 35)

'வாடையும் வந்தும் நம் பிரிந்திசினோர்க்கு அழலை நாணில மன்ற எங் கண்ணே' என்றதில் என்னை வருத்தும் வாடை எம்மைப் பிரிந்த தலைவற்கும் அழலாய் ஆங்கண் வருத்து கின் றிலதோ என்ற பிறிதொரு பொருள் படுமாறு உரைக்கலாம் வகை அறியற் பாற்று. இஃதே எஃகிய நுண் ணறிவுடைய எயிற்றியாரது கவிப் பண்பாம். காதலர் தன்னைக் கருதாது வாராமையால் தன்னெஞ்சம் அவரைக்கருதிப்புண் பட்டதால், அது வருந்த வேண்டிய இயல்புடையதா யிருக்க, அதனோடு யாதொரு தொடர்பு மிலாத தனது கண்கள் துஞ்சா வாயினவே! என விடுப்பு நிலை செய லுற வியப்புறுவா ராயினர். அவ் வியப்பில் பல வாய மன நிலைகள் எழ, தங் கணவரது நினைப்பில் ஆழ்ந்தார். துயருண்ட மனத்திலிருந்து பெருஞ் சுமை அகன்றது போன்று ஒருணர்வு உதிக்க அது எயிற்றியாரது பாவிடைப் பட்டு கீரது கருணை பொழியும் முகத்தைக் கண்டு களித்தது. பின் இக் கலை நுணுக்க வுணர்வு, தம் காதலர் எல்லின் கண் துஞ்சாது காவலரின் கணக்கினை ஆயும் வகையில் ஈடுபட்டிருக்கும் காட்சியோடு கலந் தொன் றாயினது. கலப்பினு லெய்தும் ஒன்றாகும் தன்மை யில் பேரமைதியும் திப்பிய தூய்மையும் நிலவ, அதனின்று அழகுக் கவிதை வளமொடு முளைத் தெழுந்தது.

பழமழை பொழிந் தெனப் பதனழிந் துருகிய
சிதட்டுக்கா யெண்ணின் விற் பெயர் கடை நாள்
சேற்று நிலை முனிஇய செங்கட் காரான்
நள்ளென் யாமத்தை யெனக் கரையும்
அஞ்சு வரு பொழுதி னுனும் என் கண்
துஞ்சா, வாழி தோழி, காவலர்
கணக் காய் வகையின் வருந்தி யென்
நெஞ்சு புண் ணுற்ற விழுமத் தானே. (குறுந்தொகை 261)

இப் பாட்டில், புண் பட்டதால் வருந்தும் தன் னெஞ்சத்தைக் கண்டு கண்கள் கலுழ்வது போல, ஈரும் தம் வருத்தம் போல், தம் வாழ்க்கைத் துணைவியாது வருத்தத்தைக் கண்டு உள்ளம் உருகும் கருணைத் தன்மையினை எயிற்றியார் குறிப் பாக வைத்துப் பெய்து வைத்த அருமை அறிந் துணரற் பாற்று. இவ்வாறு பிரிவினு லெய்தும் துன்பத்தை எயிற்றி யார் சிறந்த அறிவுக் கவிதையின், கண் கொண்டு நோக்கலால், காணும் துன்ப நிகழ்ச்சிகள் யாவும், அவருக்குத் துன்பத்தின் தூய்மை யியலையே தோற்றுவிப்பதினுன், அவர் வெறுந் துன்பம் உற்று ரிலர் என்பது கருத்திற் பதிக்கற் பாலது. தங் கணவர், தம் நோய் போல் பிறர் நோயினைக் காணும் உள்ளம் படைத்து அற னறிந்த பெரியோ ராதலின், தன்னை வருத்தும் வாடையும் குளிரும் தங் காதலர் சென்ற நாட்டில் இல தாதலின், அவர் வாரலர். இருந்தால், அவர் வாரா திரார் என எயிற்றியார் தன்னைத் தேற்றிக் கொள்ளும் வகையில் திகைப் பில்லா திருந்தார். காதற் கணவரைப் பேணும் கற்பின் உறுதி, திகைப்பிலும் திண்மையைத் தெருட்டு மாதலால், எயிற்றியாரது கலை யுணர்வு, காத லுணர்ச்சியின் தண்மையிலே தழைத்து பின் வரும் கவிதை யாகவே மலர்ந்தது.

நலத் தகைப் புலைத்தி பசை தோய்த் தெடுத்துத்
தலைப் புடை போக்கித் தண் கயத் திட்ட
நீரிற் பிரியாப் பருஉத் திரிகடுக்கும்
பேரிலைப் பகன் றைப் பொதியவிழ் வான்பூ
இன் கடுங் கள்ளின் மணவில் கமழும்
புன் கண் மாலையும் புலம்பும்
இன்று கொல், தோழி, அவர் சென்ற நாட்டே.

(குறுந்தொகை 330)

இப் பாவில், புகையும் மொழியாக் புலம்பும் நிலையிற் படாது எத் தகைய வாறு எயிற்றியாரது காத லுணர்வு, காணத் துடன் பொறுக்கும் நிலையினை யெய்திய தென்பதூஉம், நா ளுடுத்த நல்லாள் பிரிவின் கண்ணும் கீரருக்கு உயி ரணியா யிருந் தொழுகும் திறம் எவ்வாறு கற் பெனும் திண்மையில் இழைத்து பிறங்கிய தென்பதூஉம், குறிப்பா னுணர்த்தப் பட்டுள்ளது மகிழற் பாலது.

இங்ஙனம் நெடும் பிரிவா னுறும் நிலையைத் தாங்கி, கற்பி னுறுதியில் தங்கி நிற்றலில் எயிற்றியார் பெரிதும் ஈடுபட்டு மிக்கதோர் ஆற்றலையும் அமைதியினையும் கைவரப் பெற்றார். தன் னிலையில் தங்கி யிருத்தற் குரிய முயற்சியின் ஆற்றல் மீக் கூர, வாடைக் கண், இறைவன், இயக்குதற் பொருட்டும் அறிவுறுத்தற் பொருட்டும் நிறைந்து நிற்கும் செவ்வியினை யுணர்ந்து, தனக்கே தனி யுரிமையா யுள்ள சுருங்கக் கூறும் ஆற்றலுடன், பா வென்னும் குன் றேறி,

'குன்று நெகிழப் பண்ண குளிர் கொள்வாடை !
எனக்கே வந்தனை போறி ? புனற்கால்
அயி ரிடு குப்பையின் நெஞ்சு நெகிழ்ந் தவிழக்
கொடியோர் சென்றதே எத்து மடியா
தினையை யாகிச் சென் மதி
வினை விதுப்புறு நர் உள்ளலு முண்டே. (அகம் 163)

என்றும்,

எப் பொருள் பெறினும் பிரியன் மினோ வெனச்
செப் புவல் வாழியோ துணையுடை ஈர்க் கென
நல் காக் காதலர் நல னுண்டு துறந்த
பாழ் படு மேனி நோக்கி நோய் பொர
இணை ரிறு புடையு நெஞ்ச மொடு புணர்வு வேட்
டெயிறு தீப் பிறப் பத திருகி
நடுங்குதும் பிரியன் யாங் கடும் பனி யுழந்தே. (அகம் 217)

என்றும்,

உள்ளார் கொல்லோ காதல ருள்ளியுஞ்
சிறந்த செய்தியின் மறந்தனர் கொல்லோ
... ... ... ... ... ... ...
நுத விறை கொண்ட அயலறி பசலையொடு
தொன் னலஞ் சிதையச் சாஅய்

என்னள் கொல் அளியள் என்னு தோரே. (அகம் 235)
என பொருளெழிலும் உணர்வெழிலும், புலமைச் சுவையோடு கனித்தொழுகும் வண்ணம் பெருந் தகவோடு மொழிவாராயினர். நெஞ்சொடு கூறல், கேட்போர்க் குரைத்தல், தானே கூறல் என்ற மூவகையான், எயிற்றியார் தம் காதலரைக் குறித்து நினைந்தேங்கும் நிலையினை, அக நலன் பொலியுமாறு, ஏற்றியல் எழில் நடையில் தென் தமிழ்ச் சுவை தோன்ற புலமைக் கலையால் யாத்த பாக்கள், தொல்காப்பியத்துப் பொருளிலக்கண இயற்கை நெறியினையும் மாட்சிமையினையும் கோலி நின்று, உரைக்கொணு மாண்புற்றன வென்பது விளங்கா நிற்கும். பிரிவுத் துன்பத்தினின்றும் எயிற்றியாரது ஒரு பெற்றித் தாய மனம் எழுந்தேகும் செவ்வியினைக் காணக் காண கற்றோர் மனம் கரையிலதாகிக் கரைந் துருகும் மாட்சியுடைத்தென்பது சற்று உற்றுணர்வாரெவரும் உணரற்பாலதாகும். மற்றும் கற்பு நெறி தவறாதே பொற்புடன் தம் உள்ள நிலையினை உள்ளபடி அறிவித்து செய்யுளெழிலை எழச் செய்யும் அவரது பண்புடைச் சொற்கள், ஒரு சால் கேட்டக்கால், செவி விட்டகலாப் பான்மையுடையையாயின.

கீரரது வரவினை, தோழியர் வற்புறுக்கினும், துன்பத்தை இயற்கைத் தன்மையெனக் கொண்டு பொறுக்கும் பயிற்சியுடையார்,

' இந் நிலை களைய வருகுவர் கொல்லென
ஆனு தெறி தரும் வாடையொடு
நோனேன் தோழி! யென் தனிமை யானே. '

(அகம் 294)

என்று தனது உளப் பண்பாட்டை செந்நா வன்மையுடன் புலப்படுத்திய திறன், அவரது மன வடக்கத்தியல் மாண்பினைத் தெளிவுறுத்தும். மற்றுங் கொண்ட கொழுநரையன்றிப் பெரிய பொருள் பிறிது அறியா எயிற்றியார், தீஞ்சொற்றொடர் தொடுக்கும் வன்மையில் பிரிவின் துயரை ஆற்றியிருந்ததால், சற்று சோர்விலாருமாயினர்.

இங்ஙனம் எயிற்றியார், மனச் சோர்வு மில்லாதிருந்து வைகிய நாளில், போர் வயிற் சென்ற கீரர், பால் புரை புரவி நால்குடன் பூட்டிய நெடுந் தேர் மிசை, சேய்மைக் கண்ணே, வாகை சூடி இசையுடன் வருகின்றாரென்பதை, மருத நிலத்

தூக் கடம்பர்கள் எயிற்றியாருக்கு உணர்த்தி, அவர் தம் இன்ப உணர்ச்சியைத் தூண்டி விட்டனர். மாலைப் பொழுதில், மழை பெயல் விடவே, ஈரத் தழையினைத் தின்ன வெறுத்த மடப் பிணைகள் ஆண் மான்களுடன் உவப் பொடு கூடி, மழையால் நெகிழ்ந்த நிலத்தின் கண் துள்ளிக் குதித்தன. அஞ் சிறை வண்டினங்கள் இன்னிசை பாடி ஈட்டம் ஈட்டமாக நன் முறுவல் காட்டும் முல்லை நறு மலர்களின் விழு நறவினை நாடும் வண்ணமாய் வட்டமிட லாயின. சீராகு நெடுந் தேரின் இன மணி யிசைக்கு மொலியால் பெடையொடு கூடி யிருத்தலைக் கருதும் ஆண் வண்டினங்கள் பேதுற்று யஞ்ச, அவ் வொலியைப் புதுப் புனல் வரவின் ஒலி யெனக் கருதி, முள்ளி வேரின் கீழ் வளையின் ஆழத்தில், துணை யொடு வதியும் நண் டினங்கள் மகிழ் வொடு மேலே வந்தன.

இத் தகைய சூழ் நிலையின் கண், உயி ரின்பம் தரும் நல னொடு, செய் கடன் அறிந்து தெளியும் எயிற்றியாரது காதலன்பு கலந்து கொள்ளவே, தங் காதலர் பாகற்குக் கூறுவதாக அவரது உள்ளக் கிடையையும் பண்பினையும் கமழுமாறு, தம் முடைய நிலையோ டுடன் தழுவப் பொருந்தும் கலங் கிளர் கவிதை எயிற்றியாரது உள் ளத் தே பூரித் தெழுந்தது.

‘ கார் பயம் பொழிந்த நீர் திகழ் காலை
நன் ணயிர் பரந்த தண் ணயம் மருங்கின்
நிரை ப்றை யன்னத் தன்ன விரை பரிப்
புல் லுளைக் கலிமா மெல்லிதிற் கொளீஇய
வன் பொருங் ளையைப் பற்றி மூன்கிய
பால் கதி ராழி மெல்வழி யறுப்பக்
காலென் மருள ஏறி நூலியற்
கண்ணேக் கொழிக்கும் பண்ணமை நெடுந்தேர்
வல் விரைந் தூர்மதி நல் வலம் பெறுந
தேர் தழை முனைஇய தெறி நடை மடப்பிணை
ஏறு புணர் உவகைய ஊறில உகள
அஞ் சிறை வண்டின் மென்பறைத் தொழுதி
முல்லை நறு மலர்த் தாது நயந் தூத
எல்லை போகிய புல் லென் மாலைப்
புற வடைந் திருந்த உறைவின் நல்லூர்க்
கழி படருழந்த பனி வாருண் கண்
நன் னிறம் பரந்த பசலையள்
மின்னே ரோதிப் பின்னுப் பிணி விடவே.’ (அகம் 234)

சொற் சுருங்க விழுமிய ஓசையுடன் பொருள் விரித்தேகும் இப் பாட்டின் நடை யொழுக்கம் எயிற்றியாரது கல்வி மாண் பிற்கும் புலமை நலத்திற்கும் சான்று பகரும் தன்மையுடைய தென்பது அறிதற் பாலது.

அள்ளிலாக் களி அளும்பும் உள்ளமொடு எயிற்றியார், தமது நறுங் கூந்தலை ஒப்பனை செய்து, அணி துறந் திருந்த உறுப்புக்களி லெல்லாம் செல்வம் உறங்க, கடைத் தலையில் பெரு நகையொடு தம் காதலர் வரும் திசை நோக்கி நின்றார். நாணத்தினுற் பற்றப் பெற்ற இவர் தம் காதலன்பு, முற்றும் கரந் துறையப் பட மாட்டாதாயும், முற்றும் புறத்தே தோன்றப் பட மாட்டாதாயும், நடு நின்று ஊசலாடும் பெற்றி யினை யெய்தியது. ஆனாலும் கன்னஞ் சிலிர்க்க, எயிற்றியார் காதலரைக் கண்டு, மெல்லணி முறுவலோடு எதிர் தொழுது, பேருவப்பால் உடல் பூரித்து நெஞ்சம் தழைப்ப, ஏத மொன் றுங் காணாது எதிர்ந்து வரவேற்றார். 'பிரிவுத் துயரால் உர னுற்ற நின் ஆற்றுமையோடு கூடிய கற்புக் காந்தமே பேரி னில் விறலைத் தந்து இனிதே முடிய வைத்து என்னை இவணே நிறுத்தியது' என கீரர் உரைப்ப, கற்பும் பொறையின் பொற் பும் பெரிது முடைய எயிற்றியார் கடவு ளுணர்வுடன் தன் கடமைகளை ஆற்றினர். அருகில் நின்ற எயிற்றியார் தம் செவிலி மகளாகிய சேடியர் 'தலைவியைப் பிரிந்து களி நாளாகி யும், பிரிந்திருந்த ஞான்று தலைவியை எது போதாவது நினைந்த துண்டா? எனக் கீரரை நோக்கி நய மிகப் பகர்ந்தாள். கீரர் அதற்கு, 'பன்னரு மொழியுடையாரை' மறந்தலால் லல்லவோ நினைவு எழும். என தன்புடைய நெஞ்சினில் எயிற்றியார் நின்றும் அகன்றிலை. இமைப் பொழுதும் மறந் தறியேன், என மறு மாற்றம் நகை பட தந்து, தன்னுயிர்க் கேண்மையினைப் புலப் படுத்தினர். இதனைக் கேட்ட எயிற்றியார், கீரர் வியக்க 'எங் கணவர் எனது நிலையினையே வினை யிடத்து வெளிப் பட உரையா ராயினும், அவர் என்னையே நினைந்து நிற்பர். உழுவ லன்பிற்கு பிரிவு ஒருரை யாணி யென்பது உணராயோ! ஆடவர் வினைவயிற் றகறல் கட னெனின், அது நோன் றொழுகுதல் பெண்டிர்க் குரிய கடமையா மென்பது அறியாயோ! எனத் தோழிக்குக் கூறி அன்பு விருந்தும் அறிவு விருந்தும் வழங்கி உவந்தார்.

தன்னன் துறைவனது வென்றிக் கெல்லாம் சிறந்த காரணமாக விளங்கிய தானைத் தலைவராம் கீரர், பகைப் புலத்துக் கவர்ந்த அருங் கலங்களை சோழ மன்னர் பால் சேர்ப்பிக்க, அரசிருக்கை நோக்கிச் சென்றார். நல் நடை நல்கும் சோழ மன்னனும், அருளே நிறைந்த மன முடையராய் வெள்ளாடை யணிந்து உள்ளம் மகிழ்வுற கீரரைத் தழுவி 'போரின் முடிவு அன்று நின் வென்றி மட்டும், பெற லரும் யாக்கைக் குறு பொருள், போரில் வெற்றி பெறலே யாயினும் வெற்றி யின்பம் மட்டும், சிந்திக்கின் வெறும் ஏமாற்றமாகும். வெற்றியும் கூடுற்று நிற்கும். நின்னால் முறியடிக்கப் பட்ட பகை நாட்டரசனது குடி மக்கள் வாழ் வின்ப முற நீ ஆங்கே சென்று, நலம் பெற ஆட்சி புரிவாய்' என அரசா ளுரிமையை அன்போடு அளித்து, மடங்கல் மொய்ம்பினனையும் புகழ்ந்து போற்றினன். வெற்றிக்கு அறிகுறியாய், நற் றமிழ் வேந்தன், வேண்டுவார்க்கு வெறுக்கை முதலானவை பலவும் வேண்டுவன கொடுத்தல், சிறை விடுதல், இறை தவிர்தல் முதலியன நக ரெங்கும் மகிழ்வு தூங்க, விருப்பொடு செய்வா ராயினர்.

நாடாளும் திருவுடைய கீரர், தனது நல் வினைப் பேற் றிற்கு மகிழ்ந்திருக்கும் எயிற்றியாருடன், மலை நாடடைந்து, ஆங்கு போரினால் தகர்ந்து வலி நிலைக் குன்றிக் கிடந்த அரண் களைத் திருத்த முறச் செம்மை செய்தார். பின்னர் பொரு ளிடங்களால் தளர்ச்சி யெய்திய குடி மக்களுக்கு வேண்டுவன தந்து, அந் நாட்டினை, ஊராண்மையோடு கூடிய பேராண்மை யுடனும், வீயா விழுப் புகழோடும் அரசிய லறம் புரிந்து வந்தார். மக்களொடு மகிழ்ந்து மனை யறங் காக்கும், கலை ஞானப் பிராட்டியாரும், கீரரும், திங்கள் சேர் முடியினனும் செல்வியும் போன்று இடையறு மகிழ்வில் இமு மென் செல்வ மோடு இன் னுயி ரோம்பி இனித் திருந்தனர்.

---

## பிழை திருத்தம்.

சென்ற நந்தன, ஆனி மலரில் வெளிவந்த "பழமையைப் பழிக்காதே" என்ற கட்டுரை வழங்கியவர் பலவான்குடி திரு. அ. பழநியப்பன் அவர்கள் ஆவர். இவர்கள் பெயரை கட்டுரைத் தலைப்பின் கீழும், முன் அட்டை உட்புறம் அட்டவணையிலும் பொறிக்க விடுபட்டன. சேர்த்து வாசித்துக் கொள்வார்களாக.

# ஆங்காங்கே (16)

திரு. கோ. தியாகராசன், G. M. V. C., தஞ்சை

I முன் வெளிவந்த ஒரு கட்டுரையில் முகத்திலுள்ள சில உறுப்புகளின் பெயர்களை விளக்கினேன். இதில் எஞ்சிய சில வற்றின் பெயர்களை விளக்குகிறேன்.

(அ.) 1. நெற்றி—நெத்தி (றகரம் தகரம் போல)
இது போலவே நெற்று என்னுஞ் சொல் நெத்து என வழங்குகிறது.

நெற்றுத் தன்மையை உடையது நெற்றி.

நெற்றின் ஓடு அழுத்த முள்ளது. இது போலவே முகத்திலுள்ள பகுதிகளில் நெற்றி அழுத்தமுள்ளது. நெற்றுத் தேங்காயை தட்டிப்பார்ப்பது போல நெற்றியைத் தட்டிப் பார்த்தால் இவ்வுறுப்பு நெற்றுத் தன்மையுடையதென நன்கு விளங்கும். எனவே, நெற்றுத் தன்மையுடைய உறுப்பு நெற்றியெனப் பெயர் பெற்றது.

2. **காது** :—இச்சொல்லிற்குக் கால் பகுதி. கால்=காற்று. மால்=வேட்கை (காமம்) மாலிற்கு இடம் மாது. அதாவது மால்+து=மாது. இதேபோல் கால்+து=காது. காற்றிற்கு இடங்கொடாவிட்டால் அதன் வழி வரும் ஓசை காதில் கேட்காது (இதனால், காதில் விழவில்லை யென்கிறோம்) எனவே, இவ்வுறுப்பு காது எனப் பெயர் பெற்றது.

3. இதழ்—உதடு. இவ்வுறுப்புக்கள் மென்மையும் நெகிழ்ச்சியும் பொருந்தியன. (முன் ஒரு கட்டுரையில் மகரம் மென்மை, வழவழப்பு, நெகிழ்ச்சித் தன்மைகளைக் குறிக்குமென்றெழுதியதற்கு இச் சொல்லும் ஒரு எடுத்துக்காட்டு) இவை

சிவந்திருப்பதால் செவ்விதழ் என்றனர். பூவின் (தாமரையின்) இதழ்கள் மூடித்திறப்பது போல இவ் விதழ்களும் மூடித் திறக்கும். ஆங்கிலப் புலவர்களும் இவ்வுறுப்புக்களைப் பூவிற்கு ஒப்பிடுகிறார்கள்.

எ. கா. "— — and wonder what lay behind the faint impersonal smile, that stirred her lips into the likness of an opening flower."

வாயினூறலைக் கண்டு, சர்க்கரை, தேன் எனப் பூவில் உள்ள தேனுக்கு ஒப்பிடுவது நாம் அறிந்ததே. எனவே உதடுகள் இதழ்களாயின.

4, பல் :— பல்=எண்ணிக்கையில் கூடியது (many) முகத்திலுள்ள உறுப்புகளில் பற்களே மிக்க எண்ணிக்கை யுடையன. மற்ற உறுப்புக்கள் ஒன்றிரண்டே யாகும் எனவே, மிக்க என்றும் பொருளேற்று இவ்வுறுப்பு 'பல்' என்பதாயிற்று. பன்மைப் பொருள் குறிக்குஞ் சொல் ஒருமையைக் குறித்து இவ்வுறுப்பின் பெயராயிற்று.

5. கை :—கை, கால்களில் கைகளே சிறியன. எனவே, சிறிய என்னும் பொருளைக் குறித்துக் 'கை' என்னும் பெயர் ஏற்றது போலும். இதுபோலவே முன்கை ஒரு அளவின் பெயரை ஏற்று 'முழங்கை' என்னும் பெயராயிற்று. இவ்வளவு உள்ளக் காலும் முழங்கா லாயிற்று.

6. அரை :— அரை=பாதி. (Half) உடலை இரண்டு ஒப்பியக் கூறாய் படுக்கும் இடம் 'அரை' என்னும் பெயர் பெற்றது. இங்கும் அளவின் பெயரே உறுப்பின் பெயராயிற்று. பின் அரை என்பது இடக்கரடகற் சொல்லாய் பெண் குறிக்கும் பெயராயிற்று. அரைமூடி=பெண் குறியை மூடும் அணி. பெண்களினின்று ஆண்களுக்குத் தோற்றும் ஒரு நோயில் ஆண்களின் அரையில் கட்டி உண்டாகும். ஆகையால், இந்நோயுடையவன் தன் அரையில் ஒரு ஆப்பு அடித்துளது போல கால்களை அகட்டி அகட்டி நடப்பான். எனவே, இந்நோய் 'அரையாப்பு' என்னும் பெயர் பெற்றது.

7. கால் :—(கால்=Quarter). அரைக்குக் கீழுள்ள உடலின் அரைப் பகுதி அளவிலும், எடையிலும் ஒத்த இரு பகுதிகளாய் பிரிந்துள்ளன. எனவே, இவை ஒவ்வொன்றும் கால்களாயின. இங்கும் அளவின் பெயரே உறுப்பின் பெயராயிற்று.

8. முழி :—முழங் காலின் மேற் பகுதியிலுள்ள கொட்டாங்கச்சியும், கண்ணையும் 'முழி' என்பர். இவ் வுறுப்புக்கள் மூட்டிக் கொண்டிருப்பதன்றி, மேலும் கீழும், பக்கங்களிலும் அசையும் தன்மை யுடையன. எனவே, இவ் விரண்டு உறுப்புகளும் ஒரே பெயர் பெற்றன.

மேற் காட்டியக் கருத்துக்களை புலவர்கள் ஆராய்க.

(ஆ.) உரு :—'உரு' என்னும் சொல்லிற்கு நிறம் என்பது பொருளெனவும், நிற மில்லன கண்களுக்குப் புலப்படாவெனவும் முன் ஒரு கட்டுரையில் குறித்தேன். கிரேக்கர் நாட்டுச் சான்றோர் சாக்கிரட்டீசும் இக் கருத்தையே ஓர் இடத்தில் விளக்கியுளார். Let us say, figure is that which of all things is the only one that always accompanies Colour' (Socretes Dialogues by plats—memo)

II 1. ஒரு சொல்லிற்குப் பல பொருள்

1. மால் :— இச்சொல் மாதர் மேலுள்ள வேட்கையைக் குறிக்கும்.

2. மால்=மயக்கம். மாதர் மேல் வேட்கை கொண்டவனின் அறிவு மங்கி யிருக்கும் ஆகையால் தான் 'அவனைக் கண்டு மயங்கி விட்டான்' என்கிறோம் இம் மங்கிய அறிவே. ஒரு வேந்தர் முடி துறந்ததற்குக் காரணம் போலும்.

3. மால் :—ஒளி மங்கிய காலம். மாலை என்னுஞ் சொல்லிற்கு 'மால்' பகுதி ஏற்படு காலமும் மாலைக் காலமும் கூடும் பொழுது ஒளி மங்கி யிருக்கும் இக் காலத்திற்கு ஆங்கிலத்தில் (two light) என்பது. அறிவு மங்கிய ஒருவனை ஆங்கிலத்தில் Half past six fellow (ஆறரை மணிப் பையன்) என்பர்.

4. மால்=விட்டுணு. மால் நிற முள்ள—ஒளி மங் கலத்தின் நிறம்—விட்டுணு திருமால் என்னும் பெயர் பெற்றனர்.

('கா' என்னும் பகுதி வேறு, 'கால்' என்னும் பகுதி வேறு; 'பா' என்னும் பகுதி வேறு; 'பால்' என்னும் பகுதி வேறு; இவை போலவே 'மா' என்னும் பகுதி வேறு; 'மால்' என்னும் பகுதி வேறு. 'மால்'=விட்டுணு என்பதற்கு 'மா' பகுதி என்பர். மா=பெரிய, சிறந்த இச் சொல்லிற்கு இப் பொருள் கொடுப்பர் சிலர். என் அறிவிற் கெட்டிய வரையில் 'மால்' தனிச் சொல். இச் சொல்லே விட்டுணுவைக் குறிப்பது).

## சொல் விளக்கம்

III. (அ) கேள், கேள்வி, கேளிர், கேளன், கேள்வன், கேண்மை.

1. கேள்:—கொஞ்சம் செவிடா யுள்ளவனுக்கு ஒன்று சொல்ல, அது அவன் காதில் விழா விட்டால், 'என்ன' என் வினவுகிறான். காது கேட்பவரும், சொன்னதைப் புரிந்து கொள்ளாவிட்டால் 'என்ன சொன்னீர்' என்பதாகக் கேட் கிறான். இவ்வாறாக இவர்கள் கேட்பதைக் காது கேட்பதாகச் சொல்லுகிறோம். (காற்று புகுவதற்குக் காதில் வாயுள தேனும், கேட்பதற்கு வாயில்லை) இவ்வாறாக, 'கேள்' என் னுஞ் சொல்லிற்கு 'வினவு' என்பது முதற் பொருள் (இதற்கு ஏற்ற ஆங்கிலச் சொல் ask)

2. கேள்வி:—வினா. மேற் கூறிய இருவரும் கேட்பது வினாவாயிற்று. 'கல்வி, கேள்வி' என்பர். 'கற்றலிற் கேட்டலே நன்று' என்னும் பழமொழி யுண்டு. நாம் ஒவ் வொருவரும் எல்லா நூற்களையும் கசடறக் கற்றல் முடியாது. சிலர் சில நூற்களை ஆய்ந்தறிந்து புகலுவர். இன்னோர் புகலுவதைக் காதால் கேட்பது மன்றி, அன்னாரைக் கேள்வி கள் கேட்டு விளங்காதவற்றைத் தெளிந்து கொள்ள வேண்டும். இக் காரணத்தால் சில உரை யாசிரியர்கள் தங்கள் நூற்களில் வினா விடையாக விளங்க வைப்பர்.

'கல்' என்பதிலிருந்து 'கல்வி' என்பது வந்தது போல 'கேள்' என்பதிலிருந்து 'கேள்வி' என்பது வந்தது.

3. **கேளிர்** :—உறவினர். ஒழுக்கங் குறைவாக நான் நடந்தால் என்னை 'ஏன்' 'என்ன' என்று கேட்கும் உரிமை யுடையவரே 'கேளிர்' ஆவர். இவ் வுரிமை உறவினர் யாவர்க்கும் உரிய தல்ல. 'அவன் எப்படியாவது போகட்டும் நமக்கென்ன' என்று சொல்லிப் போகும் உறவினரைப் பிரித்துக் காட்டும் 'கேளிர்' என்னுஞ் சொல்.

4. **கேளன்** :—தோழன். என் நண்பரில், மிகுதிக் கண் என்னை இடித்துக் கேட்கும் தோழனே 'கேளன்' ஆவான்.

5, **கேள்வன்** :—மணவாளன். திருமணம் முடிந்த ஒரு பெண்ணை 'ஏன்' 'என்ன' என்று கேட்கும் உரிமை மணவாளனுக்கே யுடையது. எனவே, கேள்வி கேட்கும் உரிமையுள்ள மணவாளன் 'கேள்வன்' ஆவான்.

6. **கேள்மை அல்லது கேண்மை** :—மேற் கூறிய பண்பைக் காட்டும் இச் சொற்கள்.

(ஆ) **நிறு, நிறை.**

கல், கற்க, கற்கை, கற்றல் என்பன போல நில், நிற்க, நிற்கை, நிற்றல் என்னும் சொற்கள் அமைந்தன. 'வண்டியை நிறுத்து' என்றால், வண்டிக்காரன் அவ் வண்டி அங்கு மிங்கும் போகாமல் நிற்கச் செய்வான். எனவே 'நிறு' என்னும் சொல்லிற்கு 'நில்' என்பது அடிவேர் (root).

**நிறு** :—தராசின் தட்டுகளும், அத் தட்டுகள் அசைவதைக் காட்டும் ஊசியும் அங்கு மிங்கும் அசையாமல் நிறுத்துவதே 'நிறு' வாகும்.

நிறை :—தராசின் ஒரு தட்டில் ஒரு சேர் படிக்கல் லிருந்தால் மற்றத் தட்டில் போடும் சர்க்கரை அத் தட்டுகள் ஆடாமலும், ஊசி அசையாமலும் நிற்கச் செய்யும் அளவு இருக்க வேண்டும். அதாவது அந்த படிக் கல்லிற்கு ஒப்பிய எடையுள்ள சர்க்கரை இருக்க வேண்டும். ஆகையால் 'நிறை' என்னும் சொல் எடை அளவைக் குறிக்கும் பொருளேற்றது.

நிறை :—ஒரு சேர் எண்ணெய் வாங்கினால், அந்த அளவுக் கலன் மேல் விளிம்பு வரையில் எண்ணெய் இருக்க வேண்டும். எனவே நிறை = full.

## பிழை திருத்தம்.

'ஆங்காங்கே' 15-இல் உள்ள அச்சுப் பிழைகளும் திருத்தமும்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 98 | 15 | கையுரை | கையுறை |
| 99 | 11 | decoy | decay |
| ,, | 12 | ,, | ,, |
| ,, | 31 | (seconds) | (second) |
| 100 | 37 | எல | என. |

---

## யாழ் நூல்

பேராசிரியர் விபுலானந்த அடிகளார், பதினான்காண்டு ஆராய்ந்து எழுதிய அரிய, சிறந்த இசை நூல்.

பொருள் பொதிந்தது. தோற்றம் பொலிந்தது.

விலை மலிந்தது.

| | | |
|---|---|---|
| மெல்லிய தாள் | தாள் உறை | 15—0—0 |
| | துணி உறை | 18—0—0 |
| தடித்த தாள் | தாள் உறை | 18—0—0 |
| | துணி உறை | 20—0—0 |

அஞ்சல் செலவு வேறு,

உ

# பதிப்புரை.

---

இயல் இசை நாடகம்என்னும் முத்தமிழ்த் துறையுள் நாடகத் தமிழினைப் பல் வேறு துறைகளாக நம தமிழ் முன்னோர் பகுத்து ஆராய்ந்து விளக்கியுள்ளார்கள். வசைக் கூத்து, புகழ்க் கூத்து; வேத்தியல், பொதுவியல், வரிக் கூத்து; வரிச் சாந்திக் கூத்து; சாந்திக் கூத்து, விநோதக் கூத்து; ஆரியம், தமிழ்; இயல்புக் கூத்து, தேசிக் கூத்து என இவ்வாறு இரண் டிரண்டு பகுதிகளாகப் பகுக்கப்படும் பல வகைக் கூத்தி னிலக்கணங்களை யெல்லாம் சிலப்பதிகார வுரையாசிரியர்களாகிய அரும் பதவுரை காரரும் அடி யார்க்கு நல்லாரும அரங்கேற்று காதை யுரையினுள் எடுத்துக் காட்டி விளக்கியுள்ளார்கள். கதை தழுவி வருங் கூத்தினை நாடக மென்றும் கதை தழுவாது பாட்டினது பொருளுக் கேற்பக் கை காட்டி வல்லபஞ் செய்யும் சுவை யும் மெய்ப்பாடும் உடைய அவிநயக் கூத்தினை நாட்டிய மென்றும் வழங்குதல் மரபு. இவற்றுள் பின்னே கூறிய நாட்டியமாகிய அவிநயக் கூத்தினை ஆடுதற் குரியோர் ஆடல் பாடல் அழகு என்னும் இம் மூன்று திறததாலும் குறை வில்லாத ஆடல் மகளிரே யாவர். இவர்களை இத் துறையிற் பயிற்றுதற் குரிய நூல் நாட்டிய நூலெனப் படும். இங்ஙனம் நாட்டிய முறையைக் கற்பிக்கும் தமிழ் நூல் இளங்கோவடிகள் காலத்திற்கு முன்னரே தமிழகத்து வழங்கிய தென்பதும் அந் நூல் முறையை நன்கு கற்றுப் பயின்ற காவிரிப் பூம் பட்டினத்து ஆடல் மகளாகிய மாதவி யென்பாள் ஆடல் பாடல் அழகு என்னும் இம் மூன்று திறத்தாலுங் குறை வின்றிச் சோழ மன்னன் பேரவையில் ஆடிக் காட்டினு ளென்பதும் சிலப்பதிகார அரங் கேற்று காதையாற் புலனும்.

"பொன் னியல் பூங் கொடி புரிந்துடன் வகுத்தென
நாட்டிய நன் னூல் நன்கு கடைப் பிடித்துக்
காட்டினள்"

என்ற தொடரில் இச் சுவைக் கூத்தின் இலக்கண முணர்த் தும் நூலை நாட்டிய நன் னூல் என இளங்கோவடிகள் குறிப்பிடுதல் காணலாம். இத னியல்பு முத் தமிழிலக்கண மாகிய அகத்தியத்தும் நாடகத் தமிழ் நூலாகிய பரதத்தும் நன்கு விளக்கப் பெற்றது. நாடகத் தமிழ் நூலாகிய இத் தொன் னூல்களும் இவற்றின் பொருளை விரித்துரைப்பன

வாகிய முறுவல், சயந்தம், குண நூல், செயிற்றியம் என்பனவும் அடியார்க்கு நல்லார் காலத்திற்கு முன்பே மறைந்து போயின. இச் செய்தி "நாடகத் தமிழ் நூலாகிய பரதம் அகத்தியம் முதலாக வுள்ள தொன் னூல்களு மிறந்தன. பின்னும் முறுவல், சயந்தம், குண நூல், செயிற்றியம் என்பனவற்றுள்ளும் ஒரு சார் சூத்திரங்கள் நடக்கின்ற அத்துணை யல்லது முதல் நடு இறுதி காணாமையின் அவையும் இறந்தன போலும்" என அடியார்க்கு நல்லார் கூறுதலால் விளங்கும். குறுமுனிபாற் கேட்ட மாணாக்கர் பன்னிரு வருளொரு வராகிய சிகண்டி யென்னும் அருந்தவ முனிவர் செய்த இசை நுணுக்கமும் யாமளேந்திரர் செய்த இந்திர காளியமும அறிவனார் செய்த பஞ்ச மரபும் ஆதி வாயிலார் செய்த பரத சேனாபதியமும் கடைச்சங்க மிரீஇய பாண்டியருட் கவியரங்கேறிய பாண்டியன் மதிவாணனார் செய்த மதிவாணர் நாடகத் தமிழ் நூலும் ஆகிய இவ் வைந்து நூல்களும் அடியார்க்கு நல்லார் காலத்தே வழங்கின வென்பதும இவற்றிற் சொல்லிய இசை நாடக முடிபுகளை ஒருபுடை யொப்புமையாகக்கொண்டு முத்தமிழ் நூலாகிய சிலப்பதிகாரத்திற்கு அவ் வாசிரியர் உரை செய்தா ரென்பதும் சிலப்பதிகார உரைப் பாயிரத்திற் கூறப்பட்டன. இந் நூல்களும் பிற்காலத்தே இறந்தொழிந்தன. இந் நிலையில் சிலப்பதிகாரமும் அதன் உரைப் பகுதிகளுமே இசை நாடக நூல்களின் இயல்பினை யுணர்தற்குப் பெரிதும் துணை செய்வனவாக வுள்ளன.

முத்தமிழுள் நாடகத்தின் இலக்கணத்தினை விளக்குதல் வேண்டிப் பண்டை நாளில் பரத முனிவர் இயற்றிய நாடகத் தமிழ் நூலே பரதம் என்ற பெயராற் குறிக்கப் பட்டதென்பது 'நாடகத் தமிழ் நூலாகிய பரதம்' என அடியார்க்கு நல்லார் கூறுதலாற் புலனாம். பரத் முனிவராற் செய்யப்பட்டது என்னும் பொருளில் வழங்கிய பரதம் என்னும் நூற் பெயரானது அந் நூலிற் சொல்லப் பட்ட பொருளாகிய நாட்டியத்தைக் குறித்த ஆகுபெயராகவும் பிற்காலத்தே வழங்கப் பெறுவதாயிற்று. நாடகத் தமிழ் நூலாகிய இப் பரதமு வடமொழியிலுள்ள நாட்டிய சாத்திரமும் காலத்தால் வேறுபட்டன என உணர்தல் வேண்டும்.

இங்ஙனமாகவும் பரதம் என்பது பாவம் ராகம் தாளம் என்னும் மூன்று சொற்களிலுள்ள முதலெழுத்துக்களின் இலச்சினையாய் வழங்கிய காரணப் பெயரென வடநூலாசிரியர்களும் வட நூல் வழித் தமிழாசிரியர் சிலரும் கூறுவாராயினர். அன்னோர் கருத்தினை யொட்டியே பரத சாஸ்

திரம் என்னும் இப் பெயர் இக் காலத்தில் நாட்டிய இலக் கணத்தைக் குறித்து வழங்கி வருகின்றது.

தமிழ் நாட்டில் தொன்று தொட்டுப் பயிலப் பெற்று வரும் ஆடற் கலையாகிய நாட்டியத்தின் இயல்பினையும் அக் கலின் கலையினைப் பொருளாகக் கொண்டு தமிழிலும் வடமொழியிலும் தோன்றி வழங்கும் நூற் கருத்தினையும் விளக்க வெண்ணிய அரபத்த நாவலர் என்னும் பெரியார் பரத சாஸ்திரம் என்னும் இந் நூலை இயற்றியுள்ளார். நாட்டியத்தின் இயல்பினைச் சிறந்த முறையில் விளக்கிக் கூறுமுகமாக அதற்குத் துணையாகிய இயற்றமிழ்த் திறமும் இசைத் தமிழ்த் திறமும் இந் நூலில் விரித் துரைக்கப் பெற்றுள்ளன. இந் நூல் பாயிரம், பாவவியல், இராக வியல், தாளவியல், ஒழிபியல் என்னும் பகுதிகளை யுடைய தாகும். இது பெரும்பாலும் நூற்பாவால் இயன்று இடை யிடையே பிற பாக்களும் விரவப் பெற்றுப் பழைய உரை யுடன் விளங்குகின்றது. இதற்கு உரை யெழுதியவர் இன்னாரெனத் தெரியவில்லை. ஒருகால் இந் நூலாசிரியரே உரையினை யியற்றி யிருத்தலுங் கூடும்.

இந் நூலாசிரியர் பாண்டி நாட்டில் திருப்பெருந் துறையில் வாழ்ந்தவர். கங்கை குல மெனச் சிறப்பித்துப் போற்றப் பெறும் வேளாண் மரபிற் பிறந்தவர். முத் தமிழ்த் துறையிலும் வல்ல சிறந்த புலவர். இவர் சைவ சமயத் தலைவ ரென்பது அரபத்தர் என வழங்கும் இவரது பெயராலும் இந் நூலின் தெய்வ வணக்கச் செய்யுட்களா லும் நன்கு தெளியப்படும். இவ் வாசிரியர் வாழ்ந்த காலம் இது வெனத் திட்டமாகச் சொல்லுதற் கியலவில்லை. இந் நூலாசிரியர் தாம் கூறும் நாட்டிய இலக்கணத்திற்கு முதல் நூல்களாக வட மொழியில் சாரங்க தேவர் செய்த நூலையும் அகத்தியச் சூத்திரங்களாகப் பிற் காலத்தில் வழங்கிய சூத்திரத் தொகுதியினையும் கொண்டன ரென்பது இந் நூற் பாயிரத்திலிலுள்ள 10, 11-ஆம் பாடல்களாற் புலனும். கி. பி. பதின்மூன்றும் நூற்றாண் டில் வாழ்ந்த சங்க ரத்னகர நூலாசிரியராகிய சாரங்க தேவரை இந் நூலாசிரியர் சாரங்க தேவ இருடி யென இந் நூலிற் குறிப்பிடுதலால் இவர் கி பி 13-ஆம் நூற் றாண்டிற்குப் பிற்பட்டவ ரெனத் தெளிதல் எளிது.

இந் நூலாசிரியர் முப்பத்திரண்டு இராகங்களுக்கே இந் நூலில் இலக்கணம் கூறியுள்ளார். 16-ஆம் நூற் றாண்டின் இறுதியிலும் 17-ஆம் நூற்றாண்டின் தொடக் கத்திலும் தஞ்சை நாயக்க மன்னரின் பிரதானியா யிருந்த கோவிந்த தீக்ஷிதரின் புதல்வராகிய வேங்கடமகி யென்பார்

தாம் இயற்றிய சதுர்தண்டிப்பிரகாசிகை யென்னும் இசை நூலில் எழுபத்திரண்டு மேள ராகங்களை முதல் முதல் படைத்து வழங்கி யுள்ளார். வேங்கடமகி கூறும் எழுபத்திரண்டு இராகங்களை அரபத்த நாவலர் இந் நூலிற் குறிப்பிடாமையால் இந் நூற் பொருளின் பழமை நன்கு துணியப்படும்.

தமிழ் நாட்டிற் பயிலப்பெற்று வரும் பரத நாட்டியத்தின் இயல்பினை ஆட லாசிரியர்க்கும் இசை யாசிரியர்க்கும் தெளிவாக விளங்கும் நிலையில் அமைந்த நூல் இப் பரத சாத்திர மொன்றே யாகும். அடையாறு கலா க்ஷேத்திரப் பதிப்பாக சில ஆண்டுகளுக்கு முன் வெளியிடப்பெற்ற பரத சேனாபதீயம் என்ற பெயருடைய நூல் நாட்டிய இலக்கணத்தினை ஓரளவு சுருக்கி யுரைப்பதாகும்.

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் சார்பில் அண்மையில் வெளிவர விருக்கும் பரத சங்கிரகம் என்னும் நூல் பரத நூற் பொருள் பற்றிய குறிப்புக்களை ஒருவாறு தொகுத்துக் கூறுவதாகும். இந் நூல்களுக்குள்ளே நாட்டியத்தின் இலக்கணத்தினைச் செயல் முறைக்கேற்ப வரையறுத்து வகைப் படுத்து விளக்கும் வகையில் தலை சிறந்து விளங்குவது அரபத்த நாவலரியற்றிய இப் பரத சாஸ்திரமே யாகும்.

இப் பரத சாஸ்திரம் நெடுநாளைக்கு முன்பே அச்சிட்டு வெளிப்படுத்தப் பெற்றுள்ளது. அந் நூற்படிகள் இந் நாளிற் கிடைக்காமையால் இந் நூற்பொருளைத் தமிழ் மக்கள் அறிந்து மகிழ்தற்கு இயலாது போயிற்று. இந் நூலின் அச்சுப்படி யொன்று நம் கரந்தைத் தமிழ்ச் சங்கச் சுவடி நிலையத்திற் சேமிக்கப் பெற்றிருந்தது. அதனை யுணர்ந்த யாம் நூலாசிரியர் அருண்மிகு விபுலாநந்த அடிகளா ரவர்கள் கிடைத்தற் கரிய இந் நூலினை மீண்டும் அச்சியற்றி வெளியிடும்படி பணித் தருளினார்கள். முத் தமிழ் வித்தகராகிய அடிகளாரது ஆணையின்படி இந் நூல் நம கரந்தைத் தமிழ்ச் சங்கத்தாரால் தமிழ்ப் பொழில் வாயிலாக முறையே வெளியிடப் பெற்று இப்பொழுது முழு நூலுருவிற் காட்சி தருகின்றது. முழு வுருவத்தையும் பெறுவதாயிற்று. இந் நூற் பொருளோடு ஒத்த தமிழ் நூற் குறிப்புக்கள் இந் நூலின் அடிக் குறிப்பாகத் தரப் பெற்றுள்ளன. இப் பதிப்பிற் காணப்படும் குறைபாடுகளை நீக்கி இதனை ஆதரிக்கு முகத்தால் நம் சங்கத் தமிழ்த் தொண்டுக்கு உறுதுணை செய் துதவும்படி தமிழ்ப் பெரு மக்களை வேண்டுகின்றோம்.

---